REGD. No. M. 6311

தனி இதழ்
ஒரு அணு
இலங்கையில் 10 சதம்

மலர் 1] [இதழ் 96

# நம் நாடு

தி.மு.க. தினஇதழ் — ஆசிரியர்.. அண்ணதுரை

THE "NAM NADU" A TAMIL DAILY. THE OFFICIAL ORGAN OF: THE D.P.F

சென்னை: புரட்டாசி 17௳ சனி (3—10—53) ★ ★ ★ வெளியூர்: புரட்டாசி 18௳ ஞாயிறு (4—10—53)

[illegible]

# கருப்புக் கொடி தந்த கோபத் தீ!

## அதிகார ஆணவத்தை விளக்கியது ஐலண்டு மைதானம்

### திருவல்லிக்கேணி, தியாகராயநகர், மயிலாப்பூர் வாழுநர் குடும்பத்தோடு திரண்டு வந்து கூட்டத்தை நடத்தினர்

### நேரு பேசிய பொதுக்கூட்டத்தின் முழு விவரம்

சென்னை, அக். 3—

நேற்று மாலை, சென்னை ஐலண்டு மைதானத்தில் இந்தியத் துணைக் கண்டத்து பிரதமர் நேரு கலந்துகொண்ட பொதுக்கூட்டம் ஒரு மணி நேரத்திற்குள் முடிந்துவிட்டது.

இந்தியப் பிரதமர் நேரு, சென்னை வந்து, குறிப்பிட்ட நிகழ்ச்சிகளில் கலந்து கொண்டுவிட்டு, பொதுக்கூட்டத்திற்கு ஏற்பாடுசெய்யப்பட்டிருந்த ஐலண்டு மைதானத்திற்கு, சரியாக மாலை 6-30 மணிக்கு வந்தார். அவருடன் சென்னைப் பிரதமர் சி. இராசகோபாலாச்சாரியார், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டித் தலைவர் கே. காமராசர் மற்றும் பல முக்கியஸ்தர்கள் மேடைக்கு வந்தனர். ஏராளமான பொருட் செலவில் மேடை, ஒலிபெருக்கி விளக்கு ஆகிய வசதிகள் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தன.

தியாகராய நகர், மயிலாப்பூர், திருவல்லிக்கேணி ஆகிய பகுதியிலுள்ள காஷ்மீர் பண்டிதரின் தார்மீக சொந்தக்காரர்கள் அனைவரும் குடும்பம் குடும்பமாக பொதுக் கூட்டத்திற்கு வந்திருந்தனர், கூட்டத் துவக்கத்தில் நேரு பண்டிதருக்கு மலர் மாலை அணிவிக்கப்பட்டு, பூச்செண்டும் கொடுக்கப்பட்டது. நேரு பூச்செண்டை தோளில் சாய்த்துக்கொண்டு மேடையைச் சுற்றிவந்த காட்சி கம்ப ராமாயண உண்டாட்டுப் படலத்தை நினைவுறுத்தக்கூடியதாக இருந்தது.

நேரு பேசத் துவங்கிய 5 நிமிடத்திற்கெல்லாம், மைதானத்தின் வடதிசையில் பலத்த ஆட்சேபக் குரல் கிளம்பியது. இதைக் கண்ட நேரு, தன்னுடைய பேச்சை நிறுத்திவிட்டு, பின்பக்கமாக இருந்த ஆச்சாரியாரை அழைத்து, "ஏன் அவர்கள் சத்தமிடுகின்றனர்?" என்று கேட்டார்,

அதற்கு ஆச்சாரியார் ஏதோ சொல்ல, பின்னர் நேரு, உலகப் பிரச்னையில் தலையிட்டு; பேசத் தொடங்கினர்.

பேசத் துவங்கிய அப்போதே கூட்டத்தின் அமைதி குலையத் துவங்கி விட்டது; கூட்டத்தின் பரபரப்பு, நேருவின் குரலைக் கம்மவைத்தது. துவக்கத்தில் அவருடைய பேச்சில் இருந்த தெம்பும், தொனியும் படிப்படியாகக்

(3-ம் பக்கம் பார்க்க)

## மாலைக் கூட்டத்தில் பண்டிதர் தீப்பொறிகளாகக் கக்கினர்!

### காலையில் கூலிகளின் தடியடி தர்பார்! மாலையில் 'மனிதகுல மாணிக்க'த்தின் சொல்லம்பு வீச்சு!

### திராவிட இன எழுச்சியை கோமாளிக்கூத்தென 'கிண்டல்'!

### தனக்கே உரித்தான 'நான்சென்ஸ்' பண்பை நேரு உலகப் பதிப்புரிமை யாக்குகிறார்!

தமிழர்களின் போராட்டங்களையெல்லாம் 'நான்சென்ஸ்' — முட்டாள்தனம் — என்று நேரு சொன்ன ஆணவ வார்த்தையை வாபஸ் பெறக் கோரி, திராவிட முன்னேற்றக் கழகம் நடத்திய ரயில் நிறுத்தக் கிளர்ச்சியை, இப்போது, பண்டித நேரு, 'கோமாளித்தனம்', என கிண்டல் பேசுகிறார். வெந்த புண்ணிலே வேல் பாய்ச்சி விளையாடுகிறார்.

அகில இந்தியாவையும், ஆளும் பொறுப்பேற்றுள்ளவர், பிரதம மந்திரி-பதவியிலிருப்பவர், தென்னாட்டு மக்களை, திராவிட இனத்தை இழிவுபடுத்திப் பேசுகிறார். அஹிம்சா மூர்த்தி, தர்ம சீலர், உத்தமர் காந்தியின் உண்மைச் சீடர் கூறுகிறார்—நமையெல்லாம், 'காட்டுமிராண்டிகள்', என்று!

அது மட்டுமோ? நாம், அறிவு சூன்யம் படைத்தவர்களாம்; நமக்குத் தலை காலியாம்; நம்மிடம் பேசிப் பயனில்லையாம்—சொல்லுகிறார், மண்டைக் கனம் கொண்டவர்!

சென்னை, அக். 3—

நேற்று இங்கு பொதுக்கூட்டத்தில் பேசிய இந்தியப் பிரதம மந்திரி நேரு, திராவிட முன்னேற்றக் கழகத்தைப் பற்றி தம் மனம் கொண்ட மட்டும், ஆத்திரம் தீரும் அளவுக்குத் திட்டிப் பேசி, மிகமிக மட்டரக வார்த்தைகளைக்கூறி தம் 'காட்டுமிராண்டித்தனத்தை', 'அறிவு சூன்யத்தை'க் காட்டிக்கொண்டார்.

. நேற்று காலையில் திராவிட முன்னேற்றக் கழகத் தோழர்கள் கடலெனத் திரண்டு மவுண்ட்ரோட் சர்க்கார் மாளிகையில் நேரு நுழையும் போது கருப்புக்கொடி காட்டி அமைதியான ஆர்ப்பாட்டம் செய்ததைக்கண்டு, "நமக்கா கருப்புக் கொடி?" என வியப்பும் எரிச்சலுமடைந்து, முகஞ் சுண்டிய அவர், மாலை கூட்டத்தில் தம் ஆத்திரத்தையெல்லாம் கொட்டி

"நான் பிரதம மந்திரியானும், சர்வதேச அரங்கில ஒரு முக்கிய தலைவனானும் என்னுடைய கீழ்புத்தி என்னை விட்டுப் போகாது"

என வெளிப்படுத்திவிட்டனர்.

அவர் கூறியதாவது:—

"இன்னும் பழைய காட்டுமிராண்டித்தன போக்கிலேயே

***

## கோவையில் நேருவுக்குக் கருப்புக் கொடி

### என். எஸ். இளங்கோ தலைமையில் ஆர்ப்பாட்டம்

கோவைத் தோழர்களே!

இனத் திராவிடத்திற்கும் எஜமானன் நான்தான் என்ற எக்காளத்தோடு வருகிறார்—எதற்கெடுத்தாலும் இழிவாகப் பேசி "நான்-சென்ஸ்" என்று ஏசிய நேரு வருகிறார்!

ஆற்றல் படைத்த திராவிடத்தை அடிமைப்படுத்தும் சாசனத்திற்கு ஆதரவு தேட திக்விஜயம் செய்கிறார்—அண்ணா உட்பட ஐவரைச் சிறையில் தள்ளியவர்; ஐயாயிரம் பேர்களுக்கு இன்னல் தந்தவர்; 6 உயிர்களைப் பிசித்தவர்!

அவருக்கு அக்டோபர் 4-ம் நாள் காலை 11 மணிக்கு உக்கடத்தில் (போத்தனூர் போகும் வழி) கருப்புக் கொடி காட்டி நம் கண்டனத்தைத் தெரிவிப்போம். திரண்டு வாரீர்.

கோவை மாவட்டத்திலுள்ள எல்லாக் கிளைக் கழகத் தோழர்களும், முன்னதாகவே வந்து, தாளமுத்து - நடராசன் படிப்பகத்தில் முழு விவரம் பெற்று நிகழ்ச்சியில் கலந்து சிறப்பிக்க வேண்டப்படுகிறார்கள்.

கருப்புக் கொடி நிகழ்ச்சி தோழர் என். எஸ். இளங்கோ தலைமையில் நடைபெறும். அனைவரும் கலந்து கொள்ள.

—கடைசி செய்தி

★

## பொதுக்கூட்டம்

இந்தியப் பிரதமர் பண்டிதர் நேரு, அக். 4-ம் நாள், கோவை வருவதை முன்னிட்டு, கழக முடிவுப்படி அவருக்குக் கருப்புக்கொடி பிடிப்பதற்குப் பொதுமக்களைக் கேட்டுக்கொள்ள வேண்டி, 1—10—53 புதனன்று நகர தி. மு. க. சார்பாக காந்திச் சவுக்கு மைதானத்தில் தோழர் செ. அ. இராசமாணிக்கம் அவர்கள் தலைமையில் ஓர் மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. கூட்டத்தில் தோழர்கள் ஈரோடு எஸ். அப்பாவு, அ. பழனிசாமி, கோவை-செழியன், கவிஞர்-கண்ணதாசன் ஆகியோர் தமிழர்களைப் புன்மை மொழியால் புண்படுத்திய பண்டித நேரு அவர்களுக்குக் கருப்புக் கொடி காட்ட வேண்டிய அவசியத்தையும், ஆச்சாரியார் தி. மு. கழகத்தின் மீது

தொடுத்து வரும் அர்த்தமற்ற கணைகள் பற்றியும் விளக்கமாகப் பேசினர்.

## கோவையில்!

அக்டோபர் 4:

காலை 7-45 மணி—மதுரையில் இருந்து விமானம் மூலம் கோவை புறப்படுதல்.

காரில் மலம்புழா அணைக்கட்டுக்குச் செல்லல்.

காலை 10-45 மணி:- பாலக்காடு பொதுக்கூட்டம்.

பிற்பகல்:- பவானி சாகரம் அணைக்கட்டுக்குப் போதல்.

மாலை:- கோவை பொதுக்கூட்டத்தில் பங்கு கொள்ளல்.

அக்டோபர் 5:- கோவையிலிருந்து காலை 8-45 மணிக்கு விமான மூலம் வெளியேறல்,

***

## திருப்பூர் தோழர்களே!

நாளது 5—10—53 திருப்பூர் வரும் சென்னை முதலமைச்சர், ஆச்சாரியார் அவர்களுக்கு கருப்புக் கொடி காட்டப்படும். அது சமயம், பல்லடம் வட்டம் கிளைக் கழகத் தோழர்கள் அனைவரும் மேற்படி நிகழ்ச்சியில் கலந்து, [illegible] எதிர்ப்பை, ஆச்சாரியாருக்குக் காட்ட, திருப்பூர் நகர தி. மு. கழகக் கட்டிடத்திற்கு வர வேண்டுமாய் தோழர் எஸ். எல். நடராசன் கேட்டுக்கொள்கிறார்.

***

சில கட்சிகள் இருக்கின்றன. அத்தகையவர்கள் [illegible] உங்கள் பகுதியிலும் (தென்னாட்டிலும்) இருக்கின்றனர். இவர்களைப் பற்றிய விவரமெல்லாம் எனக்குத் தெரியாது. ஆனால், சில சமயம் இவர்களைப் பற்றிய செய்தி எனக்கு வருகிறது. சிலர் தம்மை திராவிடர் கழக உறுப்பினர்கள் என்று கூறிக் கொள்ளுகின்றனர்.

(3-ம் பக்கம் பார்க்க)

★★ ★★ ★★ ★★

## ஐவர் சிறையில்!

இன்று

## 33-வது நாள்

★★ ★★ ★★ ★★

நம் நாடு

தி.மு.க. தின இதழ் — ஆசிரியர்: அண்ணாதுரை

சென்னை : 3—10—1953 சனி

# மானங் காத்தனர்; மாவீரர்கள்!

கழகத் தலைவர் சிறையில்; செயலாற்றும் செம்மல்கள் பலரும் சிறையில்; இது குறித்து சிந்தாகுலம் கொண்டு இருக்கின்றனர், வெளியில் உலாவிவரும் தி. மு. கழகத் தோழர்கள். தலைவர்கள் என்று வெளிவருவர், கூடிக்குலாவுவர், நேர்வழி காட்டுவர், அறிவுரையை அள்ளித் தெளிப்பர், அன்புப் பார்வையை வீசுவர், என்றெல்லாம், நிமிஷத்தை எண்ணிக்கொண்டு, பெருமூச்செறிந்து கொண்டு இருக்கின்றனர்.

தலைவர்களுக்கும், வெளியில் உள்ள கழகச் செயல் வீரர்களுக்கும் இடையில் இருந்துவந்த தொடர்பை, சட்டமெனும் தடிகொண்டு, சிறையெனும் தாக்குதல் நடத்தி இப்பொழுது துண்டித்து வைத்திருக்கிறார் ஆச்சாரியார். அவர் கண்கள் சந்தோஷத்தை உமிழ்கின்றன. உள்ளம் புளகாங்கிதம் அடைகிறது. மனிதனுடைய வாழ்வே நீர்மேற் குமிழி என்கிறபொழுது, ஒரு மனிதனின் வாழ்நாளில் அவனுக்கு உண்டாகிற உள்ளப் பூரிப்பு எவ்வளவு நாட்கள் தங்கி இருக்கப்போகிறது? அதிகாரமதான் என்ன ஆச்சாரியாருக்குப் பட்டம் கட்டிவிட்ட லங்காபுரி ராஜ்யமா?—ஐயோ பாவம்! அற்ப சந்தோஷம் அடைந்து போகட்டும், இந்தத் தள்ளாடையில் ஆச்சாரியார்!

தலைவர்களையும், பற்ற இயக்கத் தோழர்களையும் சிறை தற்காலிகமாகப் பிரித்து வைத்திருந்த போதிலும், இதன் விளைவாகக் கவலைதோய்ந்த முகத்துடன் தோழர்கள் காட்சி அளித்துக் கொண்டிருந்த போதிலும், சோர்வுகொள்ள வில்லை; சமூகப் பணிபுரிய சலிப்புக் கொள்ளவில்லை; ஆச்சாரியார் கொடிய அடக்குமுறை கண்டு உள்ளம் உடைந்துவிடவில்லை. தலைவர்கள் உடனிருந்து கண்காணித்து வருவதுபோலவே, தோழர்கள் இயக்க வளர்ச்சிக்கான ஆக்க வேலைகளை 'நாளை பார்ப்போம்' என்று காலம் தாழ்த்தாமல், நாளை முடிக்கவேண்டிய பணியினையும் இன்றே முடித்துவிட்டு, மேலும் தொண்டாற்ற ஆர்வங் காட்டுகின்றனர்.

இந்தச் சூழ்நிலையில் 'கான்சென்ஸ்' சொந்தக்காரர், சென்னைக்கு வந்தார்!

வடநாட்டு ஏகாதிபத்தியத்தின் அடிமை வியாபாரி இங்கு வந்தார்!

அதிகாரத்தால் மண்டை வீங்கிப்போயிருக்கும் காஷ்மீர பண்டிதர் இங்கு வந்தார்!

ஆணவக் குன்றேறி இருக்கிற அரசியல் கோமாளி இங்கு வந்தார்!

'ஆசிய ஜோதி' என்ற அறிவற்றோர் அர்ச்சனையைக் கேட்டுக் கேட்டு, கண்ணிழந்து தவிக்கும் கண்ணிலி இங்கு வந்தார்!

'மனிதருள் மாணிக்கம்' என்ற புன்மதியினரின் புகழுரையை மாந்தி, மயங்கிக் கிடக்கிற மண்டலாதிபதி இங்கு வந்தார்!

அவருக்குக் கருப்புக்கொடி காட்டி, நமது தி. மு. கழகத்தின் அதிருப்தியைக் உணர்த்திக்கொள்வது என்ற சிறந்த முடிவிற்கு, சென்னை மாவட்டச் செயற்குழு ஒருமனதாகத் தீர்மானித்துக் கொண்டது.

கருப்புக் கொடி காட்டல், சட்ட வரம்புக்கு மாறுபட்டதல்ல. மக்களாட்சி முறைக்கு முரண்பட்டதுமல்ல. மக்களுக்குள்ள பிறப்புரிமைகளில் இதுவும் ஒன்று.

பண்டிதரின் பட்டிமானப் பேச்சுக்குத்தக்க பாடத்தை, இரண்டு தினங்களுக்கு முன்பே நமது தி. மு. கழகம் படிப்பித்து இருக்கிறது. அதற்காக விலை மதிக்கவொண்ணாத, அங்காடியில் கொள்ள முடியாத, பண்டமாற்றினால் பெற முடியாத, ஆறு உயிர்களை தாரை வார்த்துக் கொடுத்திருக்கிறது.

சொந்த நாட்டை, பிறந்த பொன்னாட்டை, மாற்றானிடமிருந்து மீட்க, இன்னும் அதிகவிலை கொடுத்தாக வேண்டும் என்பது, நமது கழகத்துக்குக் காதலர் கமலம். மானமிழந்து வாழ்தலினும் உயிர் நீக்கிக் கொள்ளுதல் உயர்ந்தது என்னும் தமிழ் மரபை நன்கு உணர்ந்து இருப்பது நமது தி. மு. கழகம்.

பண்டிதர் பவனி வருகிறார், நமது இனத்தைப் பழித்துத் தூற்றிய பாதகரொருவர் வருகிறார் என்று கேள்விப்பட்ட உடனே, பதைபதைத்து எழுந்து அறப்போர்க்கொடியினை உயர்த்தினர், சென்னை மாவட்டத் தி. மு. கழகத் தோழர்கள் பரணி பாடிக்கொண்டே.

## அகிம்சாமூர்த்திகளின் ஆகஸ்ட்தனத்திற்கு இரையானவர்கள்

★

### இந்தப் பட்டியலில் சேராத வேறு பலரும் உண்டு

சென்னை, அக். 3—

நேரு பண்டிதர், நேற்று, சென்னை நகரில் பவனி வந்தபோது, கருப்புக் கொடி காட்டி, கண்டனத்தைத் தெரிவித்துக் கொண்ட நிகழ்ச்சியில் பங்கேற்று படுகாயமுற்றோரின் தி. மு. கழகத் தோழர்களின் பட்டியல்:—

சென்னை இராயப்பேட்டை, 37-வது வட்ட செயலாளர் தோழர் கோ. இளையபல்லவன் மாகத் தாக்கப்பட்டார். போலீசார் அவரை குண்டாந்தடியால் தாக்கினார்கள்.

மற்றும் தோழர்கள் மு. இராமலிங்கம், கே. பாலசுந்தரம், ஏ. செல்வம், ஆரோக்கியசாமி, பி. ஏ. அலெக்ஸ், ஏ. சரவணம், பி. நாகராசன், எம். முனுசாமி, ம. நம்பி, சி. இராமமூர்த்தி ஆகியோரும் தாக்கப்பட்டனர்.

அதே நிகழ்ச்சியில் கலந்து கொண்ட மீர்சாகிப்பேட்டை 43-வது வட்டத்தைச் சேர்ந்த தோழர் கோபால் என்பவர் முதுகிலும், அடையிலும் கத்திக் குத்தக்களால் தாக்கப்பட்டு, கவலைக்கிடமாக இருக்கிறார்.

மற்றும் தோழர்கள் வீராசாமி, வேணுகோபால், பி. சண்முகம், கோவிந்தராசு, வேலு, தணிகாசலம், டி. எ. துரை, ஏழுமலை, எ. சி. லிங்கம், கிருட்டிணன் (12-வது வட்டம்) சின்னு ஆகியோர் தடியடி, கத்திக்குத்து, ஆகியவற்றிற்கு இலக்காகி படுகாயமுற்றனர்.

அழகிரி மன்றத்தின் சார்பில் மேற்படி நிகழ்ச்சியில் கலந்து கொண்ட தோழர்கள் க. ரத்தினம், இரா. மதிவாணன், மு. பா. வீரன், மு. தனராஜ் மற்றும், எஸ். பி. டி. திராவிடமணி (3-வது வட்டம்), வி. பெரியசாமி (4-வது வட்டம்), கணேசன் ஆகியோரும் தாக்கப்பட்டனர்.

நுங்கம்பாக்கம் 34-வது வட்ட தி. மு. கழகத் தோழர்கள்:— வ. சங்கரநாராயணன், கிருஷ்ணசாமி, இரா. பாலகிருஷ்ணன், எம். ஜெயராமன், ஆர். வெற்றிச்செல்வன், எம். சுந்தரராஜன், சம்பந்தம், மாணவத் தோழர் கண்ணன்.

கோடம்பாக்கம், 35-வட்டம் செயலாளர் புலிஅரசு, ப. இளங்கோ, ஆ. பெ. த. துரைக்கண்ணன் ஆகியோருக்கு பலத்த காயம் ஏற்பட்டுள்ளது.

கருப்புக் கொடி காட்ட ஆச்சாரியார் சர்க்கார், அனுமதி அளிப்பது போல அளித்துவிட்டது. ஆனால் வேறு ஒரு அடாதச் செயலை, அக்கிரமத்தை, அறவே வெறுக்கும் வெறித்தனத்தை, வேண்டுமென்றே விருப்போடு மேற்கொண்டது ஆச்சாரியார் சர்க்கார்.

காங்கிரஸ் கட்சியில் உள்ள கயமைக் குணம் படைத்த சண்டைவெட்டதுகளை, முண்டா உருட்டிகளை, தோள் தட்டிகளை, மீசை முறுக்கிகளை, கட்டவிழ்த்துவிட்டது,—கருப்புக் கொடியேந்தி, கண்ணியத்தை மறவாது, கட்டுப்பாடு குலையாது, அமைதி காக்கும் பண்பு கொண்ட தி. மு. கழகத் தோழர்கள்மீது, ஆச்சாரியார் சர்க்கார்.

சென்னை நகர முழுதிலும் உள்ள சமுதாய விரோதிகள் அனைவரையும், பெரும் படையாகத் திரட்டியது, சென்னை நகர் எங்கும் உள்ள காங்கிரஸ் கட்சி கிளைகள்.

காந்தியத்தை இசைத்துக் கொண்டிருந்த குயில், பாடிக்கொண்டிருந்த வானம்பாடி, பேசிக்கொண்டிருந்த கிளி, உறைவிடமாகக் கொண்டிருந்த காங்கிரஸ், வல்லூறும், கோட்டானும், ஆந்தையும் அவக்குரல் எழுப்பும் இடிந்தக் கோட்டையாக மாறி, நீண்டநாள் ஆயிற்று என்பதை, நேற்றைய காங்கிரஸ் வெறியாட்டம் நாட்டு மக்களுக்கு நன்கு விளக்கமாக்கி விட்டது.

கரங்களிலே, தேர்ந்தெடுத்த வேலூர் கழி, கழியின் மேற்கோடியிலே மூவர்ணக் கொடி, முனையிலே பதித்துள்ள கூரிய ஆணி, சிறு கத்தி, வாயிலே கள்ளச் சாராய நறுமணம், நாவிலே 'ஜவகர் வாழ்க' என்ற கோஷம்! இந்தப் படையை நடத்திச் செல்ல குறிப்பிடத்தகுந்த சில 'தளபதிகள்!' காந்தியார் ரத்தக் கண்ணீர் சொரிந்திருப்பார், இந்தக் காட்சியைக் கண்டிருந்தால்!

இந்தப்படை, நேருவுக்கு வரவேற்பளிக்க உருவான படையல்ல. தி. மு. கழகத் தொண்டர்களின் செங்குருதியைக் குடிக்க அவசர அவசரமாகத் திரட்டிய ஆயிரம் ஆயிரமாக விழுங்கியுள்ள வெள்ளை யானை! ஆச்சாரியாரின் அற்புத சிருஷ்டி!

இவர்களை, பண்டிட் விஜயலட்சுமி அவர்களின் வார்த்தைகளில் கூற வேண்டுமானால், லட்சியம் இல்லாத சோற்றுப்படை என்று குறிப்பிடலாம்! இன்னும் வேண்டுமானால், கள்ளச் சாராயப் படை என்றும் சித்தரிக்கலாம். அவ்வளவு கீழ்நோக்கிப் போக நமக்கு விருப்பமில்லை.

இவர்கள் திருவிளையாடல் குறித்து, கழகக் கருப்புக் கொடி அணிவகுப்பைத் திறம்பட நடத்திச் சென்று, பெரு வெற்றி கொண்ட சென்னை மாவட்டச் செயலாளர் விளக்கமான அறிக்கை ஒன்றை வெளியிட்டுள்ளார். அது நாளை வரும். அதைக் காணும் எவரும் கண்ணீர் விடாமல் இருக்க முடியாது.

இந்தக் கள்ளச் சாராயப் படையின் தாக்குதலுக்கு ஆளாகி, நமது கழகம் சிதைந்து விடவில்லை—சின்னாபின்னப்பட்டு சிதறி விடவுமில்லை. இதற்கு மாறாக முன்னிலும் பன்மடங்கு பலம் பொருந்திய பொதுமக்களின் நிறுவனமாக மாறி இருக்கிறது; மகிழ்ச்சிக்குரியது. நமது கழக வளர்ச்சிக்கு தங்களையும் அறியாமலே ஆக்கம் தேடிக் கொடுத்த நேற்றைய 'காங்கிரஸ் தளபதி'களுக்கு நமது நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறோம்!

மண்டை உடைக்கப் பட்டனர் சிலர், மூக்குடைபட்டவர் சிலர், பல்லுடைபட்டனர் சிலர், கைகால்கள் முறியுண்டனர் சிலர், இடத்திலேயே மூர்ச்சையுற்றுத் தரையில் சாய்ந்தனர் சிலர், சிறு சிறு தடியடித் தழும்புகளை தங்கள் தேகத்தில் தாங்கிக் கொண்டனர் பல்லோர். பரிதாபம்!

திராவிடத்துக்கு நாம் கொடுத்துள்ள விலை இது. ஆச்சாரியாரின் அடக்குமுறை பசிக்கு நாம் போட்ட படையல்! காங்கிரஸ் தளபதிகளின் இந்தச் செயலுக்குப் பெயர் 'ஜவகர் வரவேற்பு' என்பது! அருமையான வரவேற்பு! பண்பு நிறைந்த படை வரிசை! ஆச்சாரியார் சர்க்காரின் ஈடு எடுப்பு அற்ற சிருஷ்டி!

களத்தில் இறங்கிக் கடமையைச் செய்து, கயவருக்கு, இரத்த காணிக்கை செலுத்தி, வெற்றிக் கொடி உயர்த்திய மானங்காத்த வீரர்கள் அனைவருக்கும் நமது பாராட்டுதல். அணிவகுப்பை ஆக்கி, ஆணவமிக்க அரசியல் அதிகாரிக்கு, அறிவுச் சுடர் கொளுத்தி, திராவிடத்தின் மானங்காத்த மாவட்டச் செயலாளருக்கும், மற்ற வட்டச் செயலாளர்களுக்கும் நமது நன்றி. மற்றவற்றைக் குறித்து நாளை எழுதுவோம்.



### பாரதி விழா

வாணியம்பாடி, செப். 30—

29—9—53-ல், தோழர் ஐசயக் உம்மர் தலைமையில் பாரதி விழா நடைபெற்றது. அதுபோது தோழர்கள்: வி. என். சுந்தரப்பன், டி. குலசேகரதன் ஆகியோர் சொற்பொழிவாற்றினர்.

## ஆசிரியருக்குக் கடிதம்

ஆசிரியர்: 'நம் நாடு', சென்னை.

ஐயா,

26-வது வட்டத்தைச் சேர்ந்த எங்கள் மன்ற உறுப்பினர் நெடுமாறன் அவர்களுடன், தோழர்கள் ராவணன், பக்தவச்சலம், ராசமாணிக்கம், அன்பு மணி முதலியவர்களுடன் எங்கள் மன்றம் சென்றிருந்தது.

சென்னை மாவட்ட தி. மு. கழகக் கட்டளைப்படி, நேருவுக்குக் கருப்புக் கொடி காட்ட, சிம்சன் கம்பெனி அருகில் சென்றிருந்த நாங்கள், சிம்சன் கம்பெனி எதிரில் இருக்கும் சிலையருகில் நின்றிருந்தோம். காங்கிரஸ் கூலிகள் 'நேருஜிக்குக் கருப்புக் கொடி காட்டவா வந்தீர்கள்,' என்று, பாணாவைச் சுழற்றியவண்ணம், 'கையையும் காலையும் உடைக்கிறோம் பார்,' என்று அடித்தார்கள்.

இதில், மேலே குறிப்பிட்டிருக்கும் பெயருடைய நபர்களுக்குச் சரியான காயம்; நெடுமாறன் என்பவருக்கு கை உடைந்துவிட்டது; காலில் நல்ல அடி.

தோழர் நெடுமாறன், 'ஜெனரல் ஆஸ்பத்திரியில், 'காங்கிரஸ்காரர்களால் தாக்கப்பட்டேன்,' என்று 'ஆக்சிடன்டு ரிஜிஸ்தரி'ல் பதிவு செய்யும்படி கூறியும், போலீசார் தாக்கியதாக போலீசார் மீது 'ரிப்போர்ட்' பதிவு செய்து கொண்டார்கள்.

இந்த ஆவேசத்தால், நாங்கள், இன்னும் இரண்டொரு வாரங்களில் கழகத்தைத் திறக்கப் போகிறோம் என்று கூறிக் கொள்கிறோம். அடிக்க அடிக்க கழகம் வளரும் என்பதை காங்கிரசார் உணர வேண்டும்.

வ. உ. சி. மன்றத்தார்
பெரியமெட்டு, 26-வது வட்டம்,
சென்னை.



# 'மவுண்ட் ரோடு' நிகழ்ச்சி

## 'மெயில்' நிருபர் தரும் தகவல்

சென்னை, அக் 2—

இன்று காலை; நேரு, அரசாங்க மாளிகைக்கு வருவதை முன்னிட்டு, மவுண்ட்ரோடில் அரசாங்க மாளிகையின் முன் வாயிலின் எதிரில் சிம்ப்சன் முனைக்கு அருகில் காங்கிரஸ் தொண்டர்களுக்கும், திராவிட முன்னேற்றக் கழகத் தொண்டர்களுக்கும் இடையே கைகலப்பு ஏற்பட்டது. காங்கிரஸ் தொண்டர்கள் நீண்ட மூங்கில் கழிகளில் மூவர்ணக்கொடியை ஏந்தியிருந்தனர். தி. மு. கழகத் தோழர்கள் சிறிய குச்சிகளில் கருப்புக் கொடிகளைச் சுற்றியிருந்தனர்.

தி. மு. கழகத் தொண்டர்களிடம் முரட்டுத்தனமாக நடந்து கொண்டதுடன், இருதரப்பு கட்சியினரிடையே பலாத்கார கைகலப்பு ஏற்படாமல் தடுக்க முனைந்த போலீசாரை சில இடங்களில் தடுத்து ஆத்திரத்தோடு எதிர்த்தும் இருக்கின்றனர்—காங்கிரஸ் தொண்டர்கள். 50 பேருக்கு மேல் காயமடைந்தனர்.

நேரு வருகையின் போது கருப்புக் கொடி காட்டவேண்டுமென்பதே தங்கள் நோக்கமென திராவிட முன்னேற்றக் கழகம் தெரிவித்திருக்கிறது. அரசாங்க மாளிகைக்கு எதிரேயிருந்து தங்கள் எதிர்ப்பைக் காட்ட வேண்டுமென்று அவர்கள் முடிவு செய்திருக்கிறார்கள் என்று தெரியவருகிறது. ஆனாலும், நேரு மவுண்ரோட் வீதி வழியாக வந்தபோது பிற இடங்களிலும் கருப்புக் கொடிகள் காட்டப்பட்டன என்று தெரிகிறது.

காங்கிரஸ்தொண்டர்கள்கதர் உடைதரித்து நீண்ட கழிகளில் மூவர்ணக் கொடிகளைப் பிடிப்பதற்கு, பல இளைஞர் காங்கிரஸ் சங்கங்களால் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. அரசாங்க மாளிகையின் வாயிலுக்கு அருகில் ஏராளமான காங்கிரஸ் தொண்டர்களும், இதற்கு எதிர்ப்புறத்தில் கருப்புக் கொடியுடன் தி. மு. கழகத் தோழர்களும் குழுமியிருந்தனர். அவர்களை ரிசர்வ் போலீசார் சுற்றிவளைத்துக் கொண்டிருந்தனர்.

### தி.மு. கழகதொண்டர்கள் விரட்டப்பட்டார்கள்

நேரு வருவதற்கு ஒரு மணி நேரத்திற்கு முன்பு சில காங்கிரஸ் கூலிகள் ஊர்வலமாகச் சென்று தி. மு. கழகத் தோழர்களைத் துரத்தியடித்ததால் தி. மு. கழகத் தோழர்களுக்குக் காயம் ஏற்பட்டிருக்கிறது. நேரு வருகைக்கு சில நிமிடங்களுக்கு முன் தி. மு. க. கோஷ்டிக்குப் பின் புறத்தில் குழப்பம் ஏற்பட்டது. தொண்டர்கள் அடிக்கப்பட்டதால் உதவிக்காகக் கூக்குரலிட்டனர். போலீசார் அவர்களுக்கிடையே புகுந்து, இரு கோஷ்டியினரைப் பிரித்துவிட்டனர்.

ஒரு தி. மு. கழகத் தோழர் மூவர்ணக் கொடியைப் பிடுங்கி இழுத்து அதை நாசப்படுத்திவிட்டனர்.

டெலிபோன் அலுவலில் கிளார்க்காக வேலை பார்க்கும் பி. எஸ். சீனிவாசன் எனும் பார்வையாளர் அங்கு நடைபெற்ற அருவருக்கத்தக்க நடவடிக்கைகளைப் பற்றி முணுமுணுத்ததால் அவரை சிலபேர் துரத்திக் கொடிக் கம்புகளால் தாக்கினார்கள். அவர் தெருவில் பணிபுரிந்து கொண்டிருந்த கான்ஸ்டபிளிடம் ஓடினார். இரண்டு நகர போலீஸ்காரர்கள் தாக்குகின்றவர்களைத் தடுத்து நிறுத்தி, அவரைக் காப்பாற்றினார்கள்.

### மூவர்ணக் கொடியும், கருப்புக் கொடியும் காட்டப்பட்டன

நேரு வருகின்றபோது காங்கிரஸ் தொண்டர்கள் 'நேருவே வருக' என்று கோஷித்தும் மூவர்ணக் கொடிகளைக் காட்டியும் வரவேற்றனர்.

தி. மு. க. தொண்டர்களால் கருப்புக் கொடிகள் காட்டப்பட்டன. இவர்கள் முன்னே போக விரும்பினார்கள். சிலர் வளையத்தை விலக்கிக்கொண்டு, தங்கள் கொடிகளுடன் சென்றும், அவர்கள் மடக்கப்பட்டனர்.

ஒருவர் நேருவின் காருக்கு அருகாமையில் சென்றுவிட்டார். ஆயினும் அவர் கான்ஸ்டேபிலால் தடுத்து நிறுத்தப்பட்டார்.

அரசாங்க மாளிகைக்குள் கார் சென்ற பிறகு, காங்கிரஸ் தொண்டர்கள் மீண்டும் தி. மு. க. தொண்டர்களைத் தாக்க முற்பட்டனர்.

பின்னவர்களும் எதிர்த்துத் தாக்கவே, ஏற்கனவே போக்குவரவு தடைபட்டதால் ஏற்பட்ட குழப்பத்தை மேலும் அதிகரிக்கச் செய்தது. இரு கோஷ்டியினரும் நெருங்கி, மேலும் கைகலப்பு ஏற்படாமல் தடுப்பதற்கு போலீசார் பெரும்பாடு படவேண்டியதாயிற்று.

### 50 பேருக்குமேல் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்டனர்

கை கலப்பால், 50 பேருக்கு மேல் காயம் ஏற்பட்டதால் ஜெனரல் ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப்பட்டனர். இதில் ஏழு கழகத் தோழர்கள் ஆஸ்பத்திரியில் சேர்த்துக்கொள்ளப்பட்டு எஞ்சியவர் சிறு காயங்களுக்காக சிகிச்சை செய்யப்பட்டு வெளியே அனுப்பப்பட்டனர். இதில் ஒருவர் கான்ஸ்டபிள்

## அதிகார......

(1-ம் பக்கத்தின் தொடர்ச்சி)

குறைந்துகொண்டே வந்து, குகைக்குள் இருந்து பேசுவதைப் போலாகி விட்டது!

சரியாக 6-45 மணிக்கு, மேடையின் எதிரில் அமர்ந்திருந்தவர்களில் ஒரு பகுதியினர், சாரை சாரையாக எழுந்து வெளியே வந்தனர்.

ஒருபக்கம் எதிர்ப்புக்குரல், மற்றொரு பக்கம் மக்கள் வெளியேற்றம் — நேரு இதுவரை அவருடைய வாழ்நாளிலேயே எதிர்பார்த்திராத இந்தச் சம்பவம், அவருடைய இதயத்தில் கோபக் கனலை மூட்டியது எனில் அதற்காக ஆச்சரியப்படுவதற்கில்லை.

மக்கள், திரள் திரளாகக் கூட்டத்தைவிட்டு வெளியேறியதை அறிந்த ஆயுதம் தாங்கிய போலீஸ் படையினர், கூட்டத்திலுள் நுழைந்து, கூட்டத்திலிருந்து எழுந்திருப்போரை ஆவேசத்துடன், கழுத்தையும், தோள்களையும் அழுத்தி உட்காரவைத்தனர். ஒரு பக்கம் அழுத்திகூல், வேறொரு பக்கம் பிதுங்கும் ரப்பர் 'பலூன்' களைப்போல; போலீசார் ஒரு பக்கம் பலமுறுத்தி உட்கார வைக்க, மற்றொரு பக்கம் பொதுமக்கள் எழுந்துச்செல்ல ஆரம்பித்தனர்! அவர்களுடைய முயற்சியும் தோல்வியடையவே, அதற்குமேல் அவர்கள் ஏதும் செய்யாமல் நின்றுவிட்டனர்.

ஒவ்வொருவரும் அவரவர்களுக்கு பக்கத்திலிருந்தவர்களை 'எழுந்திரு, எழுந்திரு,' என்று சொல்லிக்கொண்டே பெரும்பாலோர் எழுந்தனர்.

மேடையோரத்தில் அமர்ந்திருந்த சர்மா, சாஸ்திரி, அய்யர், அய்யங்கார் குடும்பங்கள், அதிகாரிகள், அவர்களைச் சார்ந்தவர்களைத் தவிர, மற்றவர்கள், நேருவின் பேச்சைக் கேட்டார்கள் என்று சொல்வதற்கில்லை

என்று கூறப்படுகிறது. ஸ்டேப்பியர் பார்க்கை நோக்கி காங்கிரஸ் தொண்டர்கள் விரைந்தபோது, இரண்டு பெண்கள் உட்பட மூன்று குழந்தைகள் மிதிபுண்டார்கள். இவர்களுக்கு சிகிச்சை செய்யப்பட்டு, வெளியில் அனுப்பப்பட்டனர்.

'மெயில்' 2—10—53

★

# 'காந்தி ஜெயந்தி'யன்று காந்தியத்திற்குக் கல்லறை

## தேசியத்தாருக்கு தி. மு. கழகத்தாரின் இரத்த விருந்து

சென்னை, அக். 2—

சுமார் 9 மணிக்கு, நேரு வருவதற்கு முன்பே, அரசாங்க மாளிகை பக்கத்திலிருந்து காங்கிரஸ்காரர்கள் ஆரவாரம் செய்தனர். அவர்களுக்கு எதிராக தி. மு. கழகத் தோழர்கள், 'இந்து,' 'மெயில்' கட்டிடங்களின் முன்பாக நின்று, 'நேருவே திரும்பிப் போ,' 'நாவலசெல்வ வாபஸ் பெறு' என்ற கோஷங்களை எழுப்பினர். கருப்புக் கைக்குட்டைகளையும், கொடிகளையும் காண்பித்தனர். தி. மு. கழகத்தினரின் இந்த எதிர்ப்பைக் காணச் சகிக்காத, எதிர்ப்புறத்திலிருந்த காங்கிரஸ்காரர்கள் கொடிகளைச் சுழற்றிக் கொண்டு, போலீஸ்காரர்கள் நின்றுகொண்டிருந்ததையும் அலட்சியம் செய்து, தி. மு. கழகத் தொண்டர்கள்மீது பாய்ந்து மண்டையில் இரத்தம் ஒழுகும்படி அடித்தனர். 'கருப்புக் கொடியா காட்ட வந்துவிட்டீர்கள்' என்று ஆத்திரத்தோடு தடி கொண்டு, அடித்தனர். நின்று கொண்டிருந்த போலீசார் அவர்களைத் தடுக்கவும் இல்லை, விலக்கவும் முனையவில்லை. ஏழு எட்டு தோழர்களுக்கு மண்டையில் பலத்த அடியால், ரத்தம் ஒழுக ஆரம்பித்தது. இத்தகைய முதல் சம்பவத்திற்குப் பிறகு, சிம்ப்ஸன் கம்பெனியிலிருந்து தெற்கே போகும் பாதையில் யாரும் போகவோ, வரவோ இல்லாமல் தடுக்கப்பட்டது.

தி. மு. கழகத் தோழர்கள், சிம்ப்ஸன் கம்பெனியின் வாயிலுக்கு அருகில் நின்றுகொண்டு, கருப்புக் கொடி பிடித்தனர். குதிரைப் படையும், போலீசாரும் அவர்களுக்கு எதிராக நிற்க வைக்கப்பட்டனர். நேரு வருகிற சமயத்திற்கு 5 நிமிடத்திற்கு முன்பு, ஸ்டேப்பியர் பார்க் வாயிலில் ஒரு காங்கிரஸ் கோஷ்டியினர் கொடிகளையும், கம்புகளையும் தூக்கிக்கொண்டு வந்து, கருப்புக் கொடி பிடித்துக் கொண்டிருந்த தி. மு. கழகத் தோழர்கள்மீது மற்றொருமுறை தாக்க ஆரம்பித்தனர். போலீசார் இவர்களைத் தாக்க வந்தபோதும் தடுத்து நிறுத்த முன்வரவில்லை. கழிகளைச் சுற்றிக் கொண்டு அடிக்க முற்பட்டபோதும் இவர்களைத் தடுக்கவோ ஒதுக்கிவிடவோ முன்வராது இருந்தது வருந்தத் தக்கது.

பின் போலீசார் வரவே கொடிகளையும் கம்புகளையும் போட்டுவிட்டு ஓட்டம் பிடித்தனர். காலிகள். இதே நேரத்தில் நேரு வரவே கருப்புக் கொடிகளை ஆயிரக்கணக்கானவர்கள் காட்டினர். சிறு 'பாரசூட்' மூலம் கருப்பு காகிதத் துண்டுகளைப் பறக்கச் செய்தனர். நமது கழக தோழர்கள் இதைத் தவிர வேறு எவ்விதத் தகாத செயலிலும் ஈடுபடவில்லை.

நேரு உள்ளே சென்ற உடனே காங்கிரஸ் காரர்கள் கருப்புக் கொடி பிடித்த தி. மு. கழகத் தோழர்கள்மீது வஞ்சம் தீர்த்துக் கொள்ள போலீஸ் காவலையும் மீறி ஓடோடி வந்தனர்.

## கருப்புக் கொடி தந்த கோபத் தீ!

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பல்வேறு விதமான மனித வாழ்க்கை முறைகளை அறிந்து கொள்வதில் ஆர்வம் கொண்டவன் நான், இவர்கள் பற்றி தெரிந்துகொள்ளவும் ஆசைப்படுகிறேன்.

ரயிலை நிறுத்துவது போன்ற பலாத்காரச் செயல் புரிந்து இவர்கள் காட்டிய 'கோமாளித்தனம்' பற்றிய எனது கருத்தைச் சில காலத்திற்கு முன் தெரிவித்தேன். அவர்கள் செய்கையை நான் நகைப்புக்கிடமான முட்டாள்தனமெனக் கருதினேன்.

இம்மாதிரி நான் மிதமாக சொன்ன வார்த்தையை அவர்கள் எதிர்க்கிறார்கள் எனத் தெரிகிறது. ஜவகர்லால் நேரு இப்படி (முட்டாள்தனம் என்று) சொன்னதால் அதையே இன்னும் அதிகமாகச் செய்வோம் என அவர்கள் சொல்லிக் கொண்டிருந்ததாக அறிகிறேன். அவர்கள் இன்னும் காட்டுமிராண்டி கட்டத்தில்தான் இருக்கிறார்கள் என்பதற்குச் சரியான அத்தாட்சி. அவர்களது செய்கை சிலவற்றை நான் முட்டாள்தனம் என்று கூறியதால் அதே முட்டாள்தனத்தை மேலும் செய்வோம் என்கிறார்கள்

சூன்யத்திடம் (மூளை என்பதே இல்லாதவர்களிடம்) பேசிப் பயனில்லை.

ஆனால் நாம், பல்லாயிரம் ஆண்டு பக்குவத்தை, தெளிந்த சிந்தனையை, சாதனையை அடிப்படையாகக் கொண்டு வளர்ந்த ஒரு நாட்டில் வாழ்கிறோம் என்பதை நாம் உணர வேண்டும். இந்த நெடுங்காலப் பண்பாட்டின் பிரதிபலிப்பை வயலில் வேலை செய்யும் குடியானவன் முகத்தில் காணலாம். இந்நாட்டின் இந்தப் பண்டைச் சிறப்பு, இவர்களின் காட்டுமிராண்டித்தனச் செய்கைகளால் மாசுபடுத்தவும் அவர்கள் இஷ்டப்படி தலைவிரித்தாடவும் நாம் அனுமதித்துக் கொண்டா இருப்பது?

இப்போது மீண்டும் யோசித்துப் பார்க்கும்போது, 'காட்டுமிராண்டித்தனம்' என்ற அந்த சொல்லை நான் வாபஸ் பெற விரும்புகிறேன். காரணம், காட்டுமிராண்டிகள் எனப்படும் மக்களை நான் இந்தியாவின் வடகிழக்கு எல்லைப் பகுதியிலும், மற்ற இடங்களிலும் பார்த்திருக்கின்றேன். அவர்களுடன் பழகியிருக்கிறேன். அவர்கள் மிக நல்ல கூட்டம். அவர்களுடன், ஏன் இந்த ராஜ்ய மட்ட ரகங்களை நான் ஒப்பிட வேண்டும்?

ஆகையால் இவர்கள் விஷயத்தில் நாம் சரியாக நடந்து கொள்ள வேண்டும்.

(இந்தியா) கட்டுப்பாடான, புத்தி கூர்மைமிக்க ஒரு சமூகம் இத்தகைய விஷமத்தனத்தை ஆதரிக்கவோ, அனுமதிக்கவோ கூடாது. அவர்கள் (திராவிட தோழர்கள்) வேண்டுமானால் தங்கள் இஷ்டப்படி பேசட்டும், நடந்து கொள்ளட்டும்.

தங்கள் மனங்கொண்ட மட்டும், அவர்களுடைய 'பிரக்யாதி பெற்ற முட்டாள் தனத்தை' மீண்டும் செய்து கொள்ளட்டும். நமக்குக் கவலையில்லை

ஆனால் முட்டாள் தாம் என்று சொல்வது வேறு; முட்டாள்தனமாக நடந்து கொள்வது வேறு

ஆனால் இத்தகைய மடமையான, முட்டாள்தனமான, அறிவீனமான செயல்களை நாம் சகித்துக்கொள்ள முடியாது.

சென்னை சர்க்காரின் பொறுப்பைச்சேர்ந்த விஷயங்களில் நான் தலையிடுவதும், அவை பற்றி பேசுவதும் என்னுடைய வேலையல்ல. அதிலும் என்னுடைய அனுபவத்திலும், விவேகத்திலும் சிறந்தவரான ஒருவர் (சி. ஆர்.) இச்சர்க்காரின் தலைவராக இருக்கும்போது கூடாது. ஆனால் தூரத்திலிருந்து பார்க்கும் எனக்கு, அவர், இவர்கள் விஷயத்தில் ரொம்பவும் தன்மையாகவே நடந்துகொண்டார் எனத் தோன்றுகிறது எனக் கூறுவேன்."

இப்படி நேரு சொன்னதும், மேடைமீதிருந்த தோழர் ராஜகோபாலாச்சாரி நேரு அருகில் வந்து ஏதோ சொன்னார்.

உடனே நேரு, "இதெல்லாம் சிறு விஷயம். பெரிய விஷயங்களைப் பற்றி கவனிப்போம்," என்று சொல்லி, "வரலாற்றைக் கவனியுங்கள்" என்று ஆரம்பித்து, தமக்குப் பிடித்தமான ஆசிய எழுச்சி பற்றியும், அயல்நாட்டு விவகாரங்கள் பற்றியும், 'காஷ்மீரத்துச் சிங்கம்' கர்ஜித்தது!

## கல்லக்குடி அறப்போர்

★

### இன்று 83-வது நாள்

### வள்ளுவர் மன்றம்

20—9—53 அன்று செல்விக்குப்பம் லாங்கே நூலில் இரண்டாவதாண்டு விழா தோழர் சீ. சீனிவாசன் அவர்கள் தலைமையில் சிறப்புற நடந்தேறியது.

# ‘சத்தியம்’—சி. ஆர்.-க்கு ஊறுகாய் போல!

## ஜனநாயகம் பற்றிக் கூற அவருக்கு அருகதை ஏது?

### ‘உயிரைக் காட்டிலும் மானங் காத்தலே தமிழ் மரபு’

சென்னை, அக். 1—

நேற்று மாலை சுமார் 7-மணிக்கு கான்ரான்ஸ்மித் நகர் மைதானத்தில் நேருவுக்குக் கருப்புக் கொடி காட்டுகிற நிகழ்ச்சி பற்றி, மக்களுக்கும் கழகத் தோழர்களுக்கும் விளக்குவதற்காக, தோழர் ஆர். டி. அரசு தலைமையில் ஓர் மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. பல்லாயிரக்கணக்கான மக்கள் ஆர்வத்தோடு திரண்டிருந்தனர்.

தலைமை தாங்கிய தோழர் ஆர். டி. அரசு பேசுகையில், ‘திராவிடத்திலே பவனி வருகிற நேரு, வடநாட்டவர்—நம் செல்வத்தைச் சுரண்டிச் செல்லும் கும்பலின் தலைவர். அவருக்குக் கருப்புக்கொடி வரவேற்பு தர வேண்டியதின் அவசியத்தை விளக்குவதே இக்கூட்டத்தின் நோக்கம்’ என்றார்.

அடுத்து, காங்கிரஸ் கண்ணியவான்களால் தாக்கப்பட்ட, முப்புரியை அறுத்து முன்னேற்றக் கழகத்தில் சேர்ந்துள்ள தோழர் [illegible], தான் எத்தனை கஷ்டங்களுக்கு ஏதுக நேரினும், பார்ப்பனனாயிருக்கப் போவதில்லை என்றும், இனி, தன்னை யாரும் பார்ப்பனன், ஆரியன் என அழைக்கக் கூடாதெனவும் கேட்டுக் கொண்டார்.

அடுத்துப் பேசிய தோழர் கோவிந்தசாமி, எம். எல். ஏ., அவர்கள், “ஆச்சாரியாருக்கு சத்தியம் என்பது ஊறுகாய் போன்றது; இவ்வளவு, அவர், சொன்ன சொல்லைக் காப்பாற்றியதே இல்லை; இவர் உபதேசம் செய்வதுதான் ஆச்சரியமாயிருக்கிறது,” என்று குறிப்பிட்டார். அவர் மேலும் கூறியதாவது:—

“இன்று திராவிடம் சுடுகாடாய் காட்சி தருகிறது. தூத்துக்குடியிலே — கல்லக்குடியிலே காலிழந்தோர்—கையிழந்தோர்—கண்ணிழந்தோர் ஏராளம்—உயிரிழந்தோர் அநேகர்—எத்தனையோ ஆச்சாரியாரின் கொடுங்கோலாட்சியினால் பட்டினியால், பசியால் மக்கள் தினம் தினம் சாகிறார்கள். இந்த அவல நிலையிலுள்ள திராவிடத்திலே—இத்தனைக் கொடுமைகளுக்கும் காரணமான நேரு பண்டிதர் வருகிறார் காட்டுங்கள் கருப்புக் கொடி—கண்ணியமாக—கடமையைச் செய்யுங்கள்—நம் கருத்தை அவர் உணரச் செய்யுங்கள்” என்று கூறினார்.

பிறகு தோழர் கோவிந்தராசன் பேசுகையில் இன்றைய வீழ்ச்சியுற்ற திராவிடத்தின் விடுதலைப் படையினரான நமது தோழர்களும், தலைவர்களும் சிறைக்குள்ளே இருப்பதற்குக் காரண கர்த்தாக்களில் பண்டித நேருவே முதலானவர். அவர் இங்கு வரும்போது நம் அதிருப்தியைக் காட்ட, கருப்புக் கொடி அணிவகுப்பில் வாரீர்” என்று மக்களை அழைத்தார்.

நடிகமணி டி. வி. நாராயணசாமி, ‘இன்றைய பிற்போக்கு சக்திகளின் கூட்டு சேர்க்கையான காங்கிரஸ், நமது கொள்கைகளை எதிர்த்துப் பேச முடியாது போகவே, இன்று காலிகளையும் ஏவி, கழகத் தோழர்களை [illegible] [illegible] மாதிரி [illegible] [illegible] இருக்கு [illegible] மீண்டும் [illegible] அவர்களுக்காக, [illegible] நட்வடிக்கைகளுக்காக [illegible]’ என்றார்.

இறுதியாகப் பேசிய நடிகர் எஸ். எஸ். இராசேந்திரன், ‘இன்றைய திராவிடம் வளம் பெற்று, விடுதலைபெற்று நல்லதோர் வாழ்வு வாழவேண்டுமானால் திராவிடநாடு திராவிடருக்காக வேண்டுமானால் திராவிட நாடு திராவிடர்க்காக வேண்டும். அந்த திராவிடம் வடவரின் ஆதிபத்தியத்தால் சீரழிந்து கொண்டே போகிறது. அந்த சீரழிவைத் தடுத்து நிறுத்த வடநாட்டு ஏகாதிபத்தியத்தின் மீது நாம் [illegible] வேண்டும். அந்த வட ஏகாதிபத்தியத் தலைவர் நமது செயலை எல்லாம் “நான்சென்ஸ்” என்றார். தமிழன் உயிரைக் காட்டிலும் மானத்தையே பெரிதாக நினைப்பவன். நமது மானத்தைப் பறித்த வடநாட்டு நேருவுக்கு வரவேற்பு—கருப்புக் கொடி காட்டி—செய்ய வேண்டும் — நாம் தன் மானமுடையவர்கள் என்பதைக் காட்ட வேண்டும்’ என்றார்.

---

★★★★★★★★★★★

## கழகக் கூட்டங்கள்

✶

### குன்னத்தூர்:

4—10—53 ஞாயிறு மாலை

தலைவர்: தோழர் எஸ். அப்பாவு

பேசுபவர்: சி. பி. சிற்றரசு

★

### மேட்டூர்தேக்கம்:

5—10—53 திங்கள் மாலை

தலைவர்: த. ரா. அழகிரிசாமி

பேசுவோர்:

எஸ். எஸ். இளங்கோ

க. கு. சின்னசாமி

★

### திருவானைக்கா:

4—10—53 ஞாயிறு மாலை

தலைவர்: எம். துரைசாமி

பேசுவோர்:

என். எஸ். இளங்கோ

வி. சிவப்பிரகாசம்

★

### சாத்தூர்:

4—10—53 ஞாயிறு மாலை

தலைவர்: பொன்னையா

பேச்சாளர்கள்:

விருதை - ந. இராமசாமி

ம. நடராசன்

★

### கொள்ளடம்:

6—10—53 செவ்வாய் மாலை

தலைவர்: ஆர். பாலகுருசாமி

பேசுவோர்:

ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ.

புதுவை - வாணன்

---

## காஞ்சிபுரத்தில் பாராட்டுக் கூட்டம்

4—10—53 மாலை நடிகர் எஸ். எஸ். ராஜேந்திரன் தலைமையில், தோழர்கள் ப. உ. சண்முகம், காஞ்சி-கலியாணசுந்தரம், நடிகர் டி. வி. நாராயணசாமி ஆகியோர், காஞ்சி தியாகராயர் மன்றத்தின் சார்பாக சிறை சென்ற தோழர்களைப் பாராட்டிப் பேசுவர்.

---

சென்னை, அக். 3—

“தென்னிந்தியர்கள் அநேகம் பேர் மல்யுத்தத்தில் ஈடுபட்டு நிபுணர்களாக விளங்க வேண்டும்,” என்று, தான விரும்புவதாக, அமிருதசரஸைச் சேர்ந்த நடிகர் ஜோகேந்திரசிங் கூறியுள்ளார்.

---

## மணப்பாறை தி.மா.மு.க. ஆண்டு விழா

5—10—53 அன்று தோழர் சி. வி. என். கோபாலகிருட்டிணன் தலைமையில், தி. மா. மு. கழக ஆண்டு விழா நடைபெறும். தோழியர் சந்திரா - மாணிக்கம் கொடியேற்றி வைப்பார்.

தோழர்கள் ஏ. கோவிந்தசாமி எம். எல். ஏ., திருச்சி ராபி, சதிர்வேலன், கதிரேசன் தோழியர் இளமுருகு - பொற்செல்வி ஆகியோர் விழாவில் கலந்து கொள்வர்.

அன்றிரவு ‘நீதிதேவன் மயக்கம்’ ‘அறுபது ஓட்டு’கள் என்ற இரு நாடகங்கள் நடைபெறும்.

---

# “நம் நாடு”

## வெளியூர் ஏஜெண்ட்டுத் தோழர்கட்கு

“நம் நாடு” வெளியூர் ஏஜண்டுத் தோழர்கட்கு, இன்று (1—10—53) செப்டம்பர் மாத பில் அனுப்பிவைக்கப்பட்டிருக்கின்றது. பில் பாக்கித் தொகை, 10—10—53-க்குள் இங்கு கிடைக்கும்படி அனுப்பிவைக்க வேண்டுகிறோம். பில் பாக்கிகளை ஒரே தடவையில் அனுப்பாமல், 2, 3 தடவைகளில் அனுப்பியும், ஒவ்வொரு பில்லிலும் பாக்கி வைத்துக்கொண்டேவரும் ஒரு சில ஏஜண்டுகளுக்குக் கடிதம் எழுதியும், கவனிக்காமலிருக்கிறார்கள். செப்டம்பர் மாத பில் பாக்கியுடன், பழைய பில் பாக்கியும் சேர்த்து ரூபாய் அனுப்பப்படாவிட்டால், பாக்கியுள்ள தோழர்கட்கு, 10-10-53-ல் “நம் நாடு” அனுப்புவதை நிறுத்தி, ஏஜன்ஸியையும் ரத்து செய்து பாக்கியை வசூலிக்க நடவடிக்கை எடுக்கப்படும். மணியார்டர், இன்ஷூர், பாங்கி ட்ராப்டுகள் தனிப்பட்டவர் பெயருக்கு அனுப்பாமல், பொறுப்பாளர், “நம் நாடு,” ராயபுரம், சென்னை—13 முகவரிக்கு அனுப்புதல் வேண்டும். “நம் நாடு” அதிகம் இதழ்கள் வேண்டும் என்று விரும்பும் தோழர்கள், டிபாசிட் தொகையும், இதழ் 1-க்கு ரூ. 2—0—0 வீதம் அதிகம் சேர்த்து அனுப்பிவைக்க வேண்டுகிறோம்.

“நம் நாடு” பில் பாக்கியுள்ள தோழர்கள் பெயரும் ‘நம் நாட்’டில் தொடர்ந்து வெளியிட்டுவரும்படி நேரிடும் என்பதையும் தெரியப்படுத்திக்கொள்கிறோம்.

சென்னை: இராயபுரம்
1—10—53.

பொறுப்பாளர்.
“நம் நாடு”

---

## 6000 பேர் வேலை இழக்க நேரிடும்

### ஆறு ஜவுளி மில்களில் ஷிப்டு முறை ஒழிப்பு

ஆமதாபாத், அக். 1—

ஆமதாபாத்திலுள்ள ஆறு ஜவுளி மில்கள் இரண்டாவது ஷிப்டை நிறுத்திவிடுவதாக நோட்டீஸ் ஒட்டியுள்ளன என்று 70,000 தொழிலாளர்கள் கொண்ட ஜவுளித் தொழிலாளர்கள் சங்கச் செயலாளரும் பார்லிமெண்ட் உறுப்பினருமான சோமநாத்தவே கூறினார். மேற்கண்ட 7 மில்களிலும் ஷிப்டு முறையை நிறுத்த சர்க்கார் அனுமதி அளித்தால், 6000 தொழிலாளர்கள் வேலையிழப்பர்—வேதனையுறுவர். அணிகள் குவிந்துவிட்டதென ஒரு மில்காரர் இதற்குக் காரணம் கூறியுள்ளார். மற்றவர்கள் காரணம் ஏதும் கூறவில்லை.

---

### காங்கிரசிலிருந்து விலகினார்

சேலம், செப். 27—

‘நம் நாடு’ ஆசிரியருக்கு, தோழர் மா. பழனியப்பன் எழுதியது:—

நான் இதுநாள்வரை காங்கிரசில் முக்கியத் தொண்டனாகப் பணியாற்றி வந்தேன்; ஆனால் இப்பொழுது காங்கிரசில் உள்ள சில சுயநலமிகள், வடநாட்டினரின் ஏகாதிபத்தியத்திற்கு வால் பிடிப்பவர்களாகவும், திராவிடத்தைக் காட்டிக் கொடுக்கும் விபீஷணர்களாகவும் இருப்பதால், அவர்களுடைய போக்குகண்டு, நான் என்னுடைய காங்கிரஸ் அங்கத்தினர் பதவியை ராஜினாமா செய்துவிட்டு, சேலம் டவுன், அம்மாப்பேட்டை, வையாபுரி உடையார் தெருவிலிருக்கும் தி. மு. கழகக் கிளை கழகத்தில், உறுப்பினராக சேர்ந்துவிட்டேன் என்பதைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

---

### அம்மாப்பேட்டை (கிளை) தி. மு. க. செயற்குழு கூட்டம்

30—9—53ல், அம்மாப்பேட்டை (கிளை) தி. மு. கழக செயற்குழு கூட்டம், தோழர் கே. பி. கஞ்சப்பன் அவர்கள் உணவு விடுதியில், தோழர் பி. எம். கோபால் அவர்கள் தலைமையில் கூடியது. அதுபோது, அம்மாப்பேட்டை தோழர் ஜி. எம். குருசாமி அவர்கள் இயற்கை எய்தியமைக்கு அனுதாபம் தெரிவித்தும், திராவிட நாடு பிரிவினை நாள் கொண்டாட்ட வரவு—செலவு கணக்குகள் ஒப்புக்கொள்ளப்பட்டும், 7-புதிய அங்கத்தினர்கள் தேர்ந்தெடுக்கப்பட்டும், ‘தியாகராய நாடகக் கலை மன்றம்’ ஒன்று கழக சார்பில் நிறுவப்பட்டு, நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

* * *

## தூத்துக்குடி தோழர்கள் காவலில்

★

### இன்னும் எத்தனை நாள்?

---

### அருப்புக்கோட்டை தி. மு. கழக செயற்குழு கூட்டம்

அருப்புக்கோட்டை, செப். 28—

இவ்வூர் தி. மு. கழக காரியக் கமிட்டிக் கூட்டம், தோழர் சிவசண்முக சுந்தரம் இல்லத்தில், தோழர் எஸ். நடராஜன் தலைமையில் கூடி, தோழர் சு. காளிமுத்து, அவர்களின் ராஜினாமா கடிதத்தை ஒப்புக்கொண்டதுடன், புதிய உறுப்பினர்களாகத் தோழர்கள் பி. எம். சின்னசாமி, பி. பி. என். நல்லதம்பி பி. ரத்தினம், சி. பிச்சை ஆகியோர் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

---

திராவிட முன்னேற்றக் கழகத் துக்காக தோழர் இரா. நெடுஞ்செழியன், எம். ஏ., அவர்களால், அழகிரி அச்சகத்தில் அச்சிடப்பெற்று (24, சூரிய நாராயண செட்டித் தெரு, இராயபுரம்) வெளியிடப்பெறுகிறது. ஆசிரியர்: சி. என். அண்ணாதுரை, எம். ஏ.

---



Best copy available.

